26th March 1958]

யில்லை என்று சொன்னார்கள். இன்றைக்கு, இதற்கு முந்திய வருஷத்தில் எத்தனை பேர் கேட்டார்களோ, அந்த அடிப்படையில் ஒதுக்கப்படுகிறது என்று சொல்லும்போது வட ஆற்காடு ஜில்லாவிற்கு அந்த நேரத்திலே அந்தக் கணக்கு அடிப்படையில் ஒதுக்கப்படவில்லை. இதற்கு மட்டிலும் இதுபோன்று செய்வதற்குக் காரணம் என்ன ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : நான் முன்பே குறிப்பிட்டபடி, எவ்வளவு ஒதுக்கினாலும், பின்பு அதிகமாக ஒதுக்கி செலவிடப்பட்டு வருகிறது. ராமநாதபுரம்பற்றி கேள்வி கேட்டபோது புரியவில்லை. இப்போது சொல்கிறேன். **1956–57** வருஷத்தில் **50,000** ரூபாய் ஒதுக்கப்பட்டு, பின்பு அது **78,000** ரூபாயாக அதிகரிக்கப்பட்டு, **71,215** ரூபாய் செலவிடப்பட்டது. அதே மாதிரி **1957–58-ம்** வருஷத்திலே முதலில் **50,000** ரூபாய் ஒதுக்கப்பட்டு, பின்பு அது **80,000** ரூபாயாக ஒதுக்கப்பட்டு, ஆனால் பணம் செலவானது **30,000** ரூபாய்தான்.

*Steel*

*** 421 *Q.*—Sri N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Industries be pleased to state whether the Government have requested the Centre to allot additional quota of steel to this State for the purpose of starting small industries ?**

**The Hon. Sri R. VENKATARAMAN : This Government have addressed the Government of India for increasing the State quota for iron and steel for small-scale industries as the existing quota falls far short of the requirements of the small-scale industries in this State.**

**Sri N. K. PALANISAMI** : ஸார், போதுமான உருக்குக் கிடைக்காததன் காரணமாக என்ஜினீயரிங் தொழில்கள் ஏற்படுவது தடைப்பட்டிருக்கிறது. பாக்கி மாகாணங்களைவிட அதிகமாகக் கிடைக்காவிட்டாலும், பாக்கி மாகாணத்திற்கு எந்த அளவு கிடைக்கிறதோ, அந்த அளவைப் பெறுவதற்கு சர்க்கார் முயற்சி எடுத்துக்கொள்வார்களா ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : அதைத் தான் சொன்னேன். நம் ராஜ்யத்திற்கு இன்னும் அதிகமான இரும்பு உருக்கு கொடுக்கவேண்டுமென்று மத்திய சர்க்காருக்கு எழுதியிருக்கிறோம்.

**Sri S. LAZAR** : இப்பொழுது இருக்கக்கூடிய தொழிற்சாலைகளுக்கு போதுமான ஸ்டீல் கிடைத்து வருகிறதா ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : இல்லை.

Sri V. K. RAMASWAMY MUDALIYAR : Sir, there is so much of black-marketing still going on in the matter of distribution of iron. That is due to the fact that the Government of India give permits for the import of steel from abroad. Side by side, permits for the purchase of indigenous steel are also issued and the merchants are allowed to deal in both the varieties. Will the Government of Madras kindly address the Government of India to stop the import of the foreign varieties and at the same time increase the indigenous quota to the merchants?

The Hon. Sri R. VENKATARAMAN : Unfortunately, the production of iron and steel in the country is hopelessly inadequate and we have to depend on foreign imported steel to some extent. Therefore, I think the remedy would be worse than the disease if we prohibit the import of steel.

SRI A. A. RASHEED : What is the present quota of steel for the State, Sir?

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, there are three or four separate quotas such as agricultural, non-agricultural, steel processing industry and small-scale industries and we have Government developmental schemes. So far as small-scale industries are concerned, our requirements are nearly 1,800 tons per quarter, but our allocation is 500 tons per quarter.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Will the Government kindly consider the desirability of separating these two quotas? Supposing a particular merchant is given licence to deal in indigenous steel, he is also given permit to deal in foreign steel. Will the Government kindly see to the separation of these two licences?

THE HON. SRI R. VENKATARAMAN : This is a matter concerning the Central Government. If the hon. Member writes to me, I will forward it to the Government of India.

SRI N. K. PALANISAMI : சர்க்கார் டிபார்டுமெண்டுகளுக்குத் தேவையான ஸ்டீல் எப்படி வாங்கப்படுகின்றது ? தேவையான அளவு ஸ்டீல் கிடைகாததால் வேலைகள் தடைபட்டு இருப்பது சர்க்காருக்குத் தெரியுமா ? இதில் சர்க்கார் என்ன நடவடிக்கை எடுக்கப்போகிறார்கள் ?

THE HON. SRI R. VENKATARAMAN : கவர்ன்மெண்டு டெவலப்மெண்டு ஸ்கீம்களுக்கென்று தனியாக ஒரு " கோட்டா " ஒதுக்கப்பட்டிருக்கிறது. அதன்படி நமக்குத் தேவையான ஸ்டீலை நாம் பெறுகின்றோம். உதாரணமாக நம்முடைய கிண்டி இண்டஸ்டிரியல் எஸ்டேட்டை கட்டுவதற்கு 100 டன் ஸ்டீல் வாங்கினோம்.

SRI A. V. P. ASAITHAMBI : எஃகுக் கோட்டா எந்த முறையில் தனிப்பட்டவர்களுக்குக் கொடுக்கப்படுகிறது ?

THE HON. SRI R. VENKATARAMAN : சிறு கைத்தொழில்களைப் பொறுத்தவரை " நேரிடையாக உபயோகிப்பவர்கள் கோட்டா " மூலமாக வழங்குகிறோம். இதைத் தவிர " டீலர்ஸ் " இருக்கிறார்கள். அவர்களுக்கு தனியாக ஒரு " கோட்டா " கொடுக்கப்படுகிறது. சிறு கைத்தொழிலுக்காக ஒதுக்கப்படுவது 500 டன்.

SRI K. VINAYAKAM : Sir, what was the reaction of the Central Government to our representation for allotment of more quota to our State? Is the Hon. Minister aware of the fact that there is a general scarcity felt for M.S. rods, G.P. iron and iron girders by some of the small-scale industries?

THE HON. SRI R. VENKATARAMAN : The reaction of the Central Government so far is silence.

SRI S. LAZAR : சார், எந்த அடிப்படையில் ஒவ்வொரு மாகாணத்திற்கும் இந்த ' கோட்டா ' பிரித்துக் கொடுக்கப்படுகிறது ?

THE HON. SRI R. VENKATARAMAN : ஒவ்வொரு சிறு தொழிலும் எவ்வளவு உற்பத்தி செய்யமுடியும் என்று ரேடட் கபேசிடியைப் பொறுத்து ' கோட்டா ' நிர்ணயிக்கப்படுகிறது.

MR. SPEAKER : Questions are over.